# திருப்புகழமிர்தம்

கீலக

மார்கழி



ஆசிரியர் :

## கிருபானந்தவாரி

திருப்புகழமிர்தம் காரியாலயம்
89, சிங்கண்ண செட்டித் தெரு, சென்னை-2.

## புதிய வெளியீடுகள்

**1. பன்னிரு திருமுறைத் திரட்டு**

Dy. 1/16 அளவில் 120 பக்கங்கள். மூவர் தேவாரத்திலிருந்தும், பிற திருமுறைகளிலிருந்தும் திரட்டி எடுத்த 396 பாடல்கள் அடங்கியது. விலை 50 காசுகள். தபாற் செலவு பதிவு செய்யாத தபாலில் 10 காசுகள்.

**2. திருப்புகழ்** (முழுவதும் மூலம் மட்டும்)

| | | |
|---|---|---|
| (மூன்றாவது பதிப்பு) விலை | ரூ. | 6 00 |
| தபாற் செலவு | ரூ. | 1 50 |

**பாம்பன் ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள் அருளிய நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. ஸ்ரீ சுப்பிரமணிய வியாசம் | விலை ரூ. | 2 50 |
| தபாற் செலவு | ரூ. | 1 00 |
| 2. சமயங்களைக் குறித்த வியாசம் | விலை ரூ. | 1 00 |
| தபாற் செலவு | | 0 85 |

ஷை இரண்டு புத்தகங்களையும் ஒரே முறையில் அனுப்ப தபாற் செலவு ரூ. 1 15

### திருப்புகழமிர்தம் காரியாலயம்
**சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.**

## முத்தமிழ் அருவி

வெண்கலக் குரலில் பேசி மெய்ப்பொருள் நயங்கள் வீசிப்
பண்கமழ் நடிப்புக் காட்டிப் பாத்திரச் சிறப்பு நாட்டி
ஒண்கதை விருந்து வேந்தன் ஒப்பிலாப் புலமைக் காந்தம்
வண்டமிழ்க் கிருபா னந்த வாரி நின் மாண்பு வாழி !

எத்தனை அமுத மேற்கோள் இயலிசை நாட கத்தின்
முத்திரை பதித்து வெல்லும் மொழிநயம் அனைத்தும் சொல்லும்
வித்தகன் கிருபா னந்த வாரியின் மேதை போற்றி
''முத்தமிழ் அருவி'' என்று மும்முறை மொழிந்தோம் வாழி !

புத்தனேரி. ரா. சுப்பிரமணியம்.

குறிப்பு :—

பொள்ளாச்சியில் 1968 நவம்பர் 22-ல் மகாபாரத விரிவுரை நிறைவு விழாவின்போது, அருள்மொழி அரசு திருமுருக. கிருபானந்த வாரியார் சுவாமிகளுக்கு, விநாயகர் கலைமன்றத்தின் சார்பில் ''முத்தமிழ் அருவி'' என்னும் சிறப்புப் பட்டத்தைக் கவிஞர் திரு. புத்தனேரி. ரா. சுப்பிரமணியம் மேற்கண்ட பாமாலை சூட்டி வழங்கினார். பல்லாயிரக் கணக்கான மக்கள் வாழ்த்தொலி முழக்கினர்.

உ

ஓம் குஹாய நம :





# திருப்புகழமிர்தம்



''குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ரூள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்''

மலர் 33 | கீலக ஞூ—மார்கழி மீ டிசம்பர் 1968 | இதழ் 9

## திருப்புகழ்

### திருவருணை

முருகு செறிகுழல் சொருகிய விரகிகள்
முலைக ளளவிடு முகபட பகடிகள்
முதலு முயிர்களு மளவிடு களவியர் முழுநீல

முழுகு புழுககில் குழைவடி வழகியர்
முதிர வளர்கனி யதுகவ ரிதழியர்
முனைகொ ளயிலென விழியெறி கடைசிய ரநுராகம்

மருவி யமளியி னலமிடு கலவியர்
மனது திரவிய மளவள வளவியர்
வசன மொருநொடி நிலைமையில் கபடியர் வழியேநான்

மருளு மறிவின னடிமுடி யறிகிலன்
அருணை நகர்மிசை கருணையொ டருளிய
மவுன வசனமு மிருபெரு சரணமு மறவேனே

கருதி யிருபது கரமுடி யொருபது
கனக மவுலிகொள் புரிசைசெய் பழையது
கடிய வியனகர் புகவரு கனபதி கனல்மூழ்கக்

கவச அநுமனொ டெழுபது கவிவிழ
அணையி லலையெறி யெதிரமர் பொருதிடு
களரி தனிலொரு கணைவிடு மடலரி மருகோனே

சருவு மவுணர்கள் தளமொடு பெருவலி
யகல நிலைபெறு சயிலமு மிடிசெய்து
தரும னவர்பதி குடிவிடு பதனிசை மயில்வீரா
தருண மணியவை பலபல செருகிய
தலையள் துகிலிடை யழகிய குறமகள்
தனது தனமது பரிவொடு தழுவிய பெருமாளே.

## பதவுரை

கருதி=ஆராய்ந்து, இருபது கரம்=இருபது கரங்களும், முடி ஒருபது=தலைகள் ஒரு பத்தும், கனக மவுலி கொள்=பொன்மகுட மணிந்த இராவணன் ஆண்ட, புரிசை செய்=மதில்களுடன் கூடியதும், பழையது=பழமையானதும், கடிய=காவலுடன் கூடியதும், வியன் நகர்=அற்புதமானதும் ஆகிய நகரம்; புக அரு கனபதி=அயலார் புகுவதற்கு அரியதான நகரமாகிய இலங்கை, கனல் மூழ்க=எரியில் முழுக, கவச அநுமனொடு=இரட்சை போன்ற அநுமானுடன், எழுபது கவி விழ=எழுபது வெள்ளம் வாநரங்கள் மலைகளையிட்ட, அணையில் அலை எறி=கடலில் அணைகட்டிச் சென்று, எதிர் அமர் பொருதிடு களரிதனில்=எதிர்த்துப் போர் செய்த போர்க்களத்தில், ஒருகணை விடும்=ஒரு அம்பை விட்ட, அடல் அரி மருகோனே=ஆற்றலுடைய திருமாலின் திருமருகரே! சருவும் அவுணர்கள்=போராடிய அசுரர்களின், தளமொடு=படையுடன், பெரு வலி அகல=அவர்களின் மிகுந்த வலியனைத்தும் அழிய, நிலை பெறு சயிலமும் இடி செய்து=நிலை பெற்றிருந்த கிரவுஞ்சமலையை இடியுமாறு செய்து, தருமன் அவர் பதி குடிவிடு=கற்பகமரத்தின் கீழ் வாழ்ந்த தேவர்களை அவர்கள் ஊரில் குடியேற விட்ட, பதன் இசை மயில் வீரா=அழகு பொருந்திய மயில்மீது வரும் வீர மூர்த்தியே! தருணமணி அவை பல பல செருகிய தலையள்=புதிய மணிகள் பலப்பல செருகியுள்ள தலையினையுடையவளும், துகில் இடை அழகிய=இடையில் அழகாக ஆடையுடுத்தவளுமாகிய, குறமகள் தனது=வள்ளிபிராட்டியின், தனம் அது பரிவொடு தழுவிய=கொங்கையை அன்புடன் தழுவிய, பெருமாளே=பெருமை மிகுந்தவரே! முருகு செறிகுழல் சொருகிய விரகிகள்=நறுமணம் வீசும் கூந்தலைச் சொருகி முடித்துள்ள தந்திரசாலிகள்; முலைகள் அளவு இடு முகபட பகடிகள்=தனங்களை அளவிட்டுக் காட்டும்

மேலாடைதரித்துள்ள வெளிவேஷக்காரிகள்; முதலும் உயிர்களும் அளவு இடும் களவியர் = தம்பால் வருபவருடைய மூலதனத்தையும் அவர்களது தன்மைகளையும் அளந்திட வல்ல திருடிகள்; முழு நீலம் = நீலநிறம் நிரம்பவுடைய, முழுகு புழுகு அகில் குழை = புனுகு சட்டமும் அகிலும் நிரம்பப் பூசப்பட்டு மணங்கமழும், வடிவு அழகியர் = அழகிய உருவமுடையவர்கள்; முதிர வளர்கனி அதுகவர் இதழியர் = நன்குபழுத்த கொவ்வைக்கனியின் தன்மையைக் கவர்ந்துள்ள சிவந்த வாய் இதழையுடையவர்கள்; முனைகொள் அயில் என விழி எறி கடைசியர் = கூர்மையான வேல்போன்ற கண் பார்வையை வீசும் இழிந்தோர்கள்; அநுராகம் மருவி = காம இன்பம் பொருந்தி, அமளியில் நலம் இடு கலவியர் = படுக்கையில் உடல் நலத்தைத்தரும் புணர்ச்சியாளர்கள்; மனது திரவியம் அளவு அளவு அளவியர் = தங்கள் மனத்தைத் தாம்பெற்ற பொருளின் அளவில் அளந்து பார்க்கும் திருடிகள்; வசனம் ஒரு நொடி நிலைமையில் கபடியர் = பேசும் பேச்சில் ஒரு நொடிப் பொழுதில் வஞ்சனை செய்பவர்களாகிய பொது மாதர்களின், வழியே = வழியில், நான் மருளும் அறிவினன் = அடியேன் மயங்குகின்ற அறிவையுடையவன், அடிமுடி அறிகிலன் = தலைகால் தெரியாதவன்; (இத்தகைய அடியேனுக்கு) அருணை நகர் மிசை = திருவண்ணாமலையில், கருணையொடு அருளிய = கருணையுடன் தேவரீர் அருள்புரிந்த, மவுனவசனமும் = மௌன ஞானோபதேசத்தையும், இரு பெரு சரணமும் = பெருமைவாய்ந்த இரு திருவடிகளையும், மறவேனே = ஒரு போதும் மறக்கமாட்டேன்.

## பொழிப்புரை

இருபது கரங்களும், பொன் முடி தரித்த பத்து தலைகளும் உடைய இராவணன் ஆய்ந்து அரசு புரிந்த மதில்கள் கொண்டதும், பழமையானதும், காவலுடன் கூடியதும், அற்புதமானதும், பகைவர் நுழைய முடியாததுமான இலங்கையை எரியூட்டிய, இரட்சை போன்ற அநுமன் முதல் எழுபது வெள்ளம் வானரங்கள் மலைகள் இட்டுப் புதுக்கிய அணையில் சென்று, அலை வீசும் கடலையடக்கி, எதிர்த்து வந்த அசுரர்கள் போர் புரியும் போர்க்களத்தில் ஒரு கணைவிடுத்த ஆற்றல் படைத்த திருமாலின் திருமருகரே! போராடிய அசுரர்கள் தங்கள் படையுடன் மிகுந்த வலிமை யழிய, நிலைத்திருந்த கிரவுஞ்ச மலையை இடித்துப் பொடி செய்து, கற்பக மரத்தின் நிழலில் வாழ்ந்த தேவர்களை அவர்கள் நகரமாகிய தேவலோகத்தில் குடிபுகச் செய்த அழகு பொருந்திய மயில் வீரரே! புதிய மணிகள் பலப்பல செருகியுள்ள கூந்தலை யுடையவளும், இடையில் அழகாக உடை உடுத்தவளுமாகிய வள்ளியம்மையின் தனங்களை அன்புடன் தழுவிய பெருமிதம் உடையவரே! நறுமணம் வீசும் கூந்தலைச் சொருகி முடித்துள்ள தந்திர சாலிகள்; கொங்கை

களை அளவிட்டுக் காட்டும் மேலாடை யணிந்துள்ள வெளி வேஷக்காரிகள்; தம்பால் வருபவர்களுடைய மூலதனத்தையும் அவர்களது இயல்பையும் அளவிட்டுப் பார்க்கும் திருடிகள்; நீலநிறம் உடைய புனுகு அகில் முதலிய நறுமணம் பூசப்பட்ட அழகிய வடிவத்தை யுடையவர்கள்; நன்கு பழுத்த கொவ்வைக் கனியின் அழகைக் கவர்ந்த சிவந்த வாயிதழை யுடையவர்கள்; கூரிய வேல் போன்ற கண் பார்வையை வீசும் இழிந்தோர்கள், காம இன்பத்தைப் பொருந்திப் படுக்கையில் உடல் நலத்தைத் தரும் புணர்ச்சியாளர்கள்; தங்கள் மனத்தின் அன்பை அவரவர் தரும் பொருள் அளவை அளந்து தருபவர்கள்; பேசும் பேச்சில் ஒரு நொடிப் பொழுதில் வஞ்சனை புகுத்துபவர்களாகிய விலை மாதர்களின் வழியில் செல்பவன்; மயக்கங் கொண்ட அறிவுடை யவன்; தலை கால் தெரியாதவன்; இப்படிப்பட்ட அடியேனுக்குத் திருவண்ணாமலையில் தேவரீர் கருணையுடன் வழங்கி யருளிய, மௌன ஞானோபதேசத்தையும், சிறந்த இருதிருவடிகளையும் ஒரு போதும் மறக்கமாட்டேன்.

## விரிவுரை

இத்திருப்புகழில் 9 வரிகள் விலைமாதர்களின் சாகசங்களைப் பற்றிக் கூறுகின்றன.

**மருளுமறிவினன் :—**

மருள்—மயக்கம்

மாதருடைய ஆசையினால் அறிவு மயங்கும். நன்மை தீமை யாகவும், தீமை நன்மையாகவும் அறிவில் தோன்றும். மாதர் மயக்குற்றோர்க்கு இரவு பகலாகும். பகல் இரவாகும்.

**அடி முடியறிகிலன் :—**

முதலும் முடிவும் தெரியாதவன். ஆன்மா எப்படிப் பிறப் பெடுத்தது; எங்கே போய் முடிய வேண்டும் என்ற இயல்பினை யறியாதவன்.

உலக வழக்கில் தலைகால் தெரியாமல் அலைகின்றான் என்பர்.

**அருணைநகர் மிசை கருணையொடருளிய மவுன வசனமு மிரு பெரு சரணமு மறவேனே :—**

இது அருணகிரிநாதருக்குத் திருவண்ணாமலையில் முருகன் குருநாதராக வெளிப்பட்டு உபதேசித்தருளிய வரலாற்றைக் குறிக்கின்றது.

"மவுன வசனம்" என்பது "சும்மாவிரு சொல்லற" என்று இறைவன் உபதேசித்த உபதேச மொழி.

"சும்மாவிரு சொல்லற என்றலுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே"[1] —கந்தரநுபூதி.

இரு பெருசரணம் :—

பெருசரணம் என்பதற்கு பெரிய திருவடி என்று பொருள் கொள்ளக் கூடாது. இறைவன் திருவடியை அருணகிரியார் "சிற்றடி" என்றே குறிக்கின்ருர்.

"சிற்றடியு முற்றியபன் னிருதோளும்"— (பக்கரை) திருப்புகழ்.
"மணநாறு சீறடியே" —சீர்பாத வகுப்பு.

இறைவன் தாரகனுக்கும் சூரபன்மனுக்கும் முன்னே காட்சி யளித்தபோது, தண்டை யணிந்த திருவடியுடன்தான் காட்சி யளித்தார்.

"அணிமணித் தண்டை யார்க்கும்
செழு மலரடியுங் கண்டான்"
"தண்டையுஞ் சிலம்பும் ஆர்க்கும் சரணமுந் தெரியக் கண்டான்"
—கந்தபுராணம்.

ஆதலின் பெரு சரணமும் என்ற சொற்ருெடருக்கு பெருமை தங்கிய திருவடி எனக் கொள்ளவும். கிரியா சக்தி ஞானசக்தி என்ற இரண்டும் இறைவனுடைய திருவடிகளாகும்.

புகவருகனபதி :—

புக அரு கன பதி. இலங்கை பகைவரும் மற்றவரும் புகுவதற்கு அரியது.

கறங்கு கால்புகா கார்புகா கதிர்புகா மறலி
மறம்புகா தினி வானவர்புகார் என்கை வம்பே
திறம்பு காலத்துள் யாவையுஞ் சிதையினுஞ் சிதையா
அறம்பு காதிந்த அரண்மதிட் கிடக்கை நின்றகத்தின்.
—கம்பராமாயணம்.

கவச அநுமனெடெழுபது கவி :—

கவி—குரங்கு. கவசம்—காப்பு (ரட்சை)

இராவணப் போரில் இராம லட்சுமணருக்கு அநுமார் கவசம் போல இருந்து காத்தனர். அநுமாருடைய போதத் திறமும், அறிவாற்றலும் அளவிடற்கரியன.

"........அனுமானேடே யெழு
பதுவெளங் கவிசேனு சேவித
நிருபன்.............. —(மகரகுண்டல) திருப்புகழ்.
ஏற்றவெள்ளம் எழுபதி னிற்றவென்
ருற்றலாளர் —கம்பராமாயணம்.
(நாடவிட்டபலம் 2)

**தருமனவர்பதி குடிவிடு :—**

தருமன் அவர்பதி.

கற்பகத்தரு நிலைபெற்ற தேவர்களின் உலகத்தில் அமரர்களைக் குடியேறச் செய்தருளினார் முருகர்.

அன்றி தருமன் அவர் பதி எனக் கொண்டு அவுணர்களை தருமராஜனுடைய நரக லோகத்தில் குடியேற விட்டருளினார் என்றும் பொருந்தும்

தருமன் அவர்பதி என்பது ஒருமை பன்மை மயக்கம் எனக் கொள்ளவேண்டும்.

''துன்புற்றவுணர்கள் நமனுல குறவிடும் அயில் வேலா''
—(எந்தத்) திருப்புகழ்.

தேவர்களைத் தேவருலகில் குடியேற்றினார் என்ற பொருளில், கீழ்வரும் பாடலில் வருவது காண்க.

''இமையவர் நாட்டினில் நிறைகுடியேற்றிய
எழுகரை நாட்டவர் தம்பிரானே'' —(விரகற) திருப்புகழ்.

**தருணமணியவை பலபல செருகிய தலையன் துகிலிடையழகிய குறமகள் :—**

கானகத்தில் யானையின் தந்தத்தில் விளையும் முத்துக்களும் மூங்கிலில் விளையும் முத்துக்களும் மேகத்திலிருந்து வரும் முத்துக்களும் பலிந்து கிடப்பன. ஆதலின் வள்ளிபிராட்டியார் தமது கூந்தலில் முத்தாரங்களை நிரம்ப அணிந்திருக்கின்றார் என்றார்.

இடையில் அழகிய உடை உடுத்திருக்கின்றார். இந்தக் கருத்தை அநுபூதியிலும் கூறுகின்றார்.

''தூசா மணியுந் துகிலும் புனைவாள்
நேசா முருகா''

**தனமது பரிவொடு தழுவிய :—**

வள்ளிபிராட்டி இச்சாசக்தி. அவருடைய இருதனங்கள் அபரஞானம் பரஞானம் என்பன. முருகன் ஞானபண்டிதன். எனவே அபர பரஞானங்களை அன்புடன் தழுவுகின்றார் எனவுணர்க.

''இருதன விநோதப் பெருமாளே'' —(திருமக) திருப்புகழ்.

''சுந்தரஞான மென்குறமாது
தன்திருமார்பில் அணைவோனே''—(விந்ததி) திருப்புகழ்.

முருகன் ஞானமே ஒரு வடிவானவன்.
ஞானந்தான் உருவாகிய நாயகன்'' —கந்தபுராணம்.

"அறிவும் அறியாமையுங் கடந்த
அறிவு திருமேனி யென்றுணர்ந்துன்
அருண சரணாரவிந்த மென்று பெறுவேனோ"
—(குகையில்) திருப்புகழ்.

"ஞானகர சுரபாஸ்கரனே" —(மரணப்) கந்தரலங்காரம்.

முருகப் பெருமானை உபாசனை செய்வோர் ஞானம் பெறுவர்.

கருத்துரை

முருகா! உன் உபதேச மொழியையும் இரு சரணாரவிந்தங் களையும் ஒரு போதும் மறவேன்.

## திருப்புகழ்

விடமு மமுதமு மிளிர்வன இணைவிழி
வனச மலதழல் முழுகிய சரமென
விரைசெய் ம்ருகமத அளகமு முகிலல வொருஞான
விழியின் வழிகெட இருள்வதொ ரிருளென
மொழியு மமுதல வுயிர்கவர் வலையென
விழையு மிளநகை தளவல களவென வியனுபித்
தடமு மடுவல படுகுழி யெனஇடை
துடியு மலமத னுருவென வனமுலை
சயில மலகொலை யமனென முலைமிசை புரள்கோவை
தரள மணியல யமன்விடு கயிறென
மகளிர் மகளிரு மலபல வினைகொடு
சமையு முருவென வுணர்வொடு புணர்வது
மொருநாளே
அடவி வனிதையர் தனதிரு பரிபுர
சரண மலரடி மலர்கொடு வழிபட
அசல மிசைவிளை புனமதி லினிதுறை தனிமானும்
அமர ரரிவையு மிருபுடை யினும்வர
முகர முகபட கவளத வளகர
அசல மிசைவரு மபிநவ கலவியும் விளையாடும்
கடக புளகித புயகிரி சமுகவி
கடக கசரத துரகத நிசிசரர்
கடக பயிரவ கயிரவ மலர்களும் எரிதீயுங்

கருக வொளிவிடு தனுபர கவுதம
புனித முனிதொழ அருணையி லறம்வளர்
கருணை யுமைதரு சரவண சுரபதி பெருமாளே.

### பதவுரை

அடவி வனிதையர்=வனதேவதைகள், தனது இரு பரிபுர சரண மலர் அடி=தன்னுடைய சிலம்பணிந்த அடைக்கலம் புகத்தக்க மலர் போன்ற இரண்டு திருவடிகளை, மலர் கொடு வழிபட=மலர்களைக் கொண்டு வழிபாடு செய்ய, அசல மிசை விளை=மலைமீது விளைந்துள்ள, புனமதில் இனிது உறை=தினைப்புனத்தில் இனிது அமர்ந்திருந்த, தனிமானும்=ஒப்பற்ற மான்போன்ற வள்ளி பிராட்டியும், அமரர் அரிவையும்=தேவர் வளர்த்த புதல்வியாம் தெய்வ யானையம்மையும், இருபுடையினும் வர=இரண்டு பக்கங்களிலும் வர, முகர=ஒலி செய்வதும், முகபட=முகபடாம் உடையதும், கவள=உணவு கொள்வதும், தவள=வெண்ணிற முடையதும், கர அசல மிசை வரும்=துதிக்கை யுடையதும் மலைபோன்றதுமான யானைமீது எழுந்தருளி வரும், அபிநவ=புதுமை வாய்ந்தவரே! கலவியும் விளையாடும்=சேர்க்கையின்பத்தில் விளையாடுகின்ற, கடக=கங்கணம் அணிந்தனவும், புளகித=புளகங் கொண்டுள்ளனவு மாகிய, புயகிரி சமுக=புயங்களாகிய மலைக் கூட்டத்தையுடையவரே; விகட அக=அழகு வாய்ந்த உள்ளமுடையவரே! கச ரத துரகத= யானை தேர் குதிரைகளுடன் கூடிய, நிசிசரர் கடக=அசுரசேனை கட்கு, பயிரவ=பயத்தைச் செய்பவரே! கயிரவ மலர்களும்= செவ்வாம்பல் மலர்களும், எரிதீயும் கருக=எரிகின்ற தீயும் கருகும் படி, ஒளிவிடு தநுபர=ஒளிவீசுகின்ற திருவுருவையுடைய கடவுளே! கவுதம புநித முநிதொழ=கவுதமர் என்னும் தூய முநிவர் தொழுது வழிபட, அருணையில் அறம் வளர்=திருவண்ணுமலையில் அற நெறியை வளர்த்த, கருணை உமை தரு=கருணை வடிவினராம் உமா தேவியார் பெற்ற, சரவண=சரவணமூர்த்தியே! சுரபதி=இந்திரன் போற்றும், பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! விடமும் அமுதமும் மிளிர்வன இணைவிழி=நஞ்சும் அமுதமும் இரண்டுங் கொண்டு விளங்குகின்ற இரண்டு கண்களும், வனசம் அல=தாமரை மலர்கள் அல்ல, தழல் முழுகிய சரம் என=நெருப்பில் தோய்ந்த அம்புகளாம் என்றும், விரை செய் ம்ருகமத அளகமும்=நறுமணங் கமழும் கஸ்தூரி வாசனையையுடைய கூந்தலும், முகில் அல=மேகம் அன்று, ஒரு ஞான விழியின் வழிகெட=ஒப்பற்ற ஞானக்கண்ணால் நாடும் வழியை மறைக்கும், இருள்வது ஓர் இருள் என=இருளைத் தரும் தனியிருளாம் என்றும், மொழியும் அமுது அல=பேச்சும் அமுதம் அன்று, உயிர் கவர் வலை என=உயிரையே கவரும் வலை

யாம் என்றும், விழையும் இளநகை=விரும்பும் இளம்பற்கள், தளவு அல=முல்லை யரும்பு அன்று, களவு என=திருட்டுத்தனத்தையுடையது என்றும், வியன் நாபி தடமும்=வியப்பைத் தருகின்ற தொப்புள் என்னும் இடமும், மடுவு அல=மடு அன்று, படுகுழி என=படுகுழியாம் என்றும், இடை துடியும் அல=இடையானது உடுக்கையன்று, மதன் உரு என=மன்மதனுடைய உருவமாம் என்றும், வன முலை சயிலம் அல=அழகிய கொங்கைகள் மலைகள் அல்ல, கொலை யமன் என=கொலைபுரிகின்ற யமனே யென்றும், முலை மிசை புரள் கோவை=கொங்கைகளின் மேல் புரளுகின்ற வடம், தரள மணி அல=முத்துமணியன்று, யமன் விடு கயிறு என=இயமன் விட்ட பாசக்கயிறேயாகும் என்றும், மகளிர்=பொதுமாதர்கள், மகளிர் அல=மாதர்கள் அல்லர், பல வினை கொடு சமையும் உரு என=பல வினைகள் சேர்ந்து அமைந்த வடிவங்களே என்றும், உணர்வொடு புணர்வதும் ஒரு நாளே=உணர்கின்ற ஞான உணர்ச்சியுடன் அடியேன் கூடுகின்ற ஒருநாள் சிறியேனுக்குக் கிடைக்குமோ?

## பொழிப்புரை

வன தேவதைகள், தன்னுடைய சிலம்பணிந்தனவும் அடைக்கலம் புகத்தக்கனவும் ஆன மலர் போன்ற இருதிருவடிகளை வழிபாடு செய்ய மலையில் விளைந்த தினைப் புனத்தில் அமர்ந்திருந்த ஒப்பற்ற மான்போன்ற வள்ளி நாயகியும், தேவர்கள் வளர்த்த தெய்வயானையம்மையும் இருபக்கங்களிலும் வர, ஒலி செய்வதும், முகபடாம் உடையதும், உணவு கொள்வதும், வெண்ணிற முடையதும், தும்பிக்கையையுடையதும் மலை போன்றதுமான பிணிமுகம் என்ற யானை மீது எழுந்தருளும் புதுமை வாய்ந்தவரே! சேர்க்கையின்பத்தில் விளையாடும் கங்கணம் அணிந்துள்ளனவும், பூரிப்புடையனவுமாகிய புய மலைக் கூட்டத்தையுடையவரே! அழகிய உள்ளமுடையவரே! யானை தேர் குதிரை முதலிய சேனைகளை யுடைய அசுரர்களது படைகளுக்குப் பயத்தைத்தருபவரே! செவ்வாம்பல் மலர்களும், எரிகின்ற தீயும் கருதும்படி அவ்வளவு சிவந்த ஒளியை வீசும் திருமேனியையுடைய கடவுளே! தூய கவுதம முனிவர் வணங்கி வழிபாடு செய்யும் திருவண்ணாமலையில் அறநெறியை வளர்க்கும் உமாதேவியார் பெற்ற சரவணப் பெருமானே! இந்திரன் தொழும் பெருமித முடையவரே! நஞ்சும் அமுதமும் ஆகிய இரண்டுங் கலந்து விளங்கும் இருகண்களும் குளிர்ந்த தாமரை மலர்கள் அல்ல; நெருப்பு தோய்ந்த கணைகளாம் என்றும், கஸ்தூரி மணம் வீசும் கூந்தல் மேகம் அன்று, ஒப்பற்ற ஞானக் கண்ணால் காணும் வழியைக் கெடுக்கும் இருளைத்தரும் தனியிருளேயாகும் என்றும், மொழியானது அமுதம் அன்று, உயிரையே கவர்கின்ற வலையாம் என்றும், விரும்புகின்ற இளம் பற்கள் முல்லை யரும்பு அன்று, திருட்டுத்தனம் நிறைந்தது

என்றும், வியப்பைத்தருந் தொப்புள் என்ற இடம் மடு அன்று, உயிர்கள் இடறிவிழும் படுகுழியாம் என்றும். இடை உடுக்கை யன்று, மன்மதனுடைய உருவம் என்றும், அழகிய கொங்கைகள் மலைகள் அல்ல, யமனே யென்றும், தனங்களின் மீது புரளுகின்ற வடமானது முத்துமணியன்று, இயமன் விடுகின்ற பாசக் கயிறு என்றும், பொதுமாதர் மாதர்கள் அல்லர், பல தீவினைகளால் அமைந்த வடிவங்கள் என்றும் உணர்கின்ற ஞான உணர்ச்சியுடன் அடியேன் கூடுகின்ற ஒரு நன்னாள் எனக்கு உண்டாகுமோ?

## விரிவுரை

**விடமு மமுதமு மிளிர்வன இணைவிழி வனசமல தழல் முழுகிய சரமென :—**

இத்திருப்புகழ் மிகுந்த சுவையுள்ளது. இனிய கனியமுதம் போற் சொல்லமைப்புள்ளது.

முதலில் உள்ள நான்கு அடிகளும் விலக்கணியாகும். இது அன்று. இது ஆகும் என்று சதுரப் பாடாகக் கூறி மயக்கக் கடலில் அழுந்தும் மாந்தரைக் கைதூக்கி விடுகின்றார் அருணகிரிநாதர்.

பெண்களின் கண்கள் துன்பம் இன்பம் இரண்டுஞ் செய்யும் இயல்புடையன. ஆதலால் "விடமுமமுதமும் மிளிர்வன இணை விழி"யென்றார்.

"கடுவு மமிர்தமும் விரவிய விழியினர்"
—(களபமொழுகிய) திருப்புகழ்.

மாதரது கண்பார்வை நோயும் செய்யும். அந்நோய்க்கு மருந்துமாகும் என்கின்றார் திருவள்ளுவர்.

இருநோக் கிவளுண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய் நோக்கொன் றந்நோய்க்கு மருந்து.

குளிர்ந்து தேன் பொழிவது தாமரை. பெண்களின் கண்கள் தாமரைக்குச் சமானம் என்று கூறுவது மரபு அது குளிர்ந்த தாமரையன்று. திகு திகு என்று எரிகின்ற தீயில் காய்ந்த அம்பு ஆகும். அத்துணை கொடியது என்கின்றார்.

**விரைசெய் ம்ருகமத அளகமு முகிலல ஒரு ஞான விழியின் வழிகெட இருள்வதொர் இருளென :—**

ம்ருகமதம்—மான்மதமான கஸ்தூரி. நறுமணங் கமழும் கஸ்தூரி தடவிய கூந்தல் மேகம் போன்று கரியது என்று புலவர் கூறுவர். அது மேகம் அன்று; ஒப்பற்ற ஞானக் கண்ணால் காண்கின்ற அருள் வழியை அடியுடன் மறைக்கவல்ல பேரிருளைத் தரும் அடர்ந்த இருளேயாகும் என்கின்றார்.

**மொழியுமமுதல உயிர் கவர் வலையென :—**

மாதர்கள் பேசும் வார்த்தையை அமுதம் போன்றது என்பர். அம்மொழி அமுதமன்று; உயிரையே பறிக்கின்ற வலையென உணர்க என்கின்றார்.

**பிறையுமிளநகை தளவல களவென :—**

விருப்பத்தை விளைவிக்கும் அவர்களது இள நகையான பற்களை முல்லை யரும்பு என்று வியந்து கூறுவர். அது முல்லை யரும்பு அன்று; திருட்டுத்தனத்தை இருப்பிடமாகக் கொண்டது என்கின்றார்.

**வியனுபித் தடமு மடுவல படுகுழியென :—**

வியன்—வியப்பு. வியப்பைத் தருகின்ற நாபி (தொப்புள்) ஆற்றிடைப் பள்ளமாகிய மடு என்று பாராட்டிப் புகழ்ந்து கூறுவர். அது மடு அன்று. யானைகளைப் பிடிக்க அமைத்த பெருங்குழியாகும் என்கின்றார்.

**இடை துடியுமல மன னுருவென :—**

துடி—உடுக்கை.

மாதரின் இடையை உடுக்கை போன்றது (துடியிடை) என்று அம்மம்ம! என்று உயர்த்தியுரைப்பர். அது துடியன்று. மயக்கத்தைச் செய்கின்ற மன்மதனுடைய வடிவமாகும் என்கின்றார்.

மன்மதன் அநங்கன். அவன் உருவம் கண்ணுக்குத் தெரியாது. அது போல் மாதர் இடையும் நுண்மையானது. மென்மையானது என்று புலவர் கூறுவர்.

"வேதா வானேன் எழுதி னனிலையோ"

—(கலகவாள்விழி) திருப்புகழ்.

**வனமுலை சயிலமல கொலையமனென :—**

அரிவையரது அழகிய தனங்கள் மலை போன்றது என்று கூறுவர். அது மலையன்று; கொலை செய்யும் யமனேதான் என்கின்றார்.

**முலைமிசை புரள் கோவை தரளமணியல யமன் விடு கயிறென :—**

மாதரது தனத்தில் புரளுகின்ற முத்து மாலையானது, மாலையன்று; யமன் எறிகின்ற பாசக்கயிறு ஆகும் என்கின்றார்.

**மகளிர் மகளிருமல பல வினைகொடு சமையு முருவென :—**

அந்த விலைமாதர் உண்மையில் மாதர்கள் அல்லர். அநேக தீவினைகள் குவிந்து வடிவங்களாக நடமாடுகின்றன.

மாதர்யம ஞருமவர் மைவிழியே வன்பாசம்
பீதிதரு மல்குல் பெருநரகம்—ஓதவதில்
வீழ்ந்தோர்க்கும் ஏற விரகில்லை. போரூரைத்
தாழ்ந்தோர்க்கும் இல்லை தவறு.

—திருப்போரூர்ச் சந்நிதிமுறை.

உணர்வொடு புணர்வது மொருநாளே:—

உணர்வு—மெய்யுணர்வு.

மெய்யுணர்வுதான் ஆன்மாவை ஈடேற வைக்கும்: அதனால் திருவள்ளுவர் மெய்யுணர்வு என்று ஒரு அதிகாரத்தைக் கூறியருளினார்.

திருக்குறளாகிய திருமாளிகைக்குக் கோபுரம் போன்றது பாயிரம். அம்மாளிகையின் படுக்கை வீடு போன்றது வாழ்க்கைத்துணை நலம் என்ற அதிகாரம். கொலு மண்டபம் போன்றது இறைமாட்சியென்ற அதிகாரம். உணவு விடுதி போன்றது விருந்தோம்பல் என்ற அதிகாரம்.

அத்திருமாளிகையின் பூசையறைபோன்றது மெய்யுணர்வு என்ற அதிகாரம். பய பத்தியுடன் வழிபாட்டு அறைக்குள் செல்லவேண்டும். அது போல் மிகுந்த அன்புடனும் தூய்மையுடனும் படிக்க வேண்டிய அதிகாரம் மெய்யுணர்வு;

"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லாத வர்க்கு.
ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு"

என்பன மிகவுயர்ந்த வாக்குகள்.

ஆதலின் உணர்வுடன் புணர வேண்டும். அந்நாள் எந்நாள் வரும் என்று சுவாமிகள் முருகனிடம் முறையிடுகின்றார்.

அடவி வனிதையர் தனதிரு பரிபுர சரண மலரடி மலர் கொடு வழிபட:—

அடவி வனிதையர்—வன தேவதைகள்.

கானகத்தில் தினைப்புனத்தில் வாழ்ந்த வள்ளிபம்மையாரை வனத்தில் வாழும் பெண் தெய்வங்கள், அடைக்கலம் என்று கூறி அன்புடன் நறுமலர்களைக் கொண்டு வழிபட்டனவாம்.

தனிமானும் அமர ரரிவையும் இருபுடையினும் வர :—

முருகப் பெருமானுடைய இருபுறங்களில் வள்ளியும் தேவசேனையும் எழுந்தருளி வருகின்றார்கள். ஒன்று இச்சாசக்தி. மற்றொன்று கிரியா சக்தி. வள்ளிபிராட்டியைக் கொண்டு இகலோக

நலன்களையும், தேவ சேனை மூலம் பரலோக நலன்களையும் முருகப் பெருமான் அடியார்கட்கு வழங்கி யருள்கின்றான்.

"வானக மங்கையும் தேன்வரை வள்ளியும்
இருபுறந் தழைத்த"
"குஞ்சரக் கோதையும் குறமகட் பேதையும்
இருந்தன இருபுறத் தெந்தை யென்னமுதம்"
—கல்லாடம்.

முகர முகபட கவளத வளகர அசல மிசைவருமபிநவ :—

முகரம்—ஒலி' யானையின் முதுகிலிருந்து இருமணிகள் தொங்கும். யானை நடக்கும் போது அவை கணீர் என்று ஒலி செய்யும்.

முகபடம்—யானையின் முகத்தில் தங்கம் இரத்தினம் பதித்த அலங்காரத்துணியைத் தொங்க விடுவார்கள். அதற்கு முகபடாம் என்று பெயர்.

கவளம்—யானை துதிக்கையால் எடுத்து உண்ணும் உணவு கவளம் எனப்பட்டது.

தவளம்—வெண்மை. முருகன் வெள்ளானை மீது உலாவருவர் அந்த யானை பிணிமுகம் என்ற பேருடையது.

" வேழம் மேல் கொண்டு "
" ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி "
—திருமுருகாற்றுப்படை.

"சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தமர் உழக்கி" —பரிபாடல்.
"கடுஞ்சின விறல் வேள் களிறூர்ந் தாங்கு" —பதிற்றுப்பத்து.
"மாறு வென்றிப் பிணிமுக ஊர்தி
ஒண் செய் யோனும்" —புறநானூறு.

அபிநவம்—புதுமை. முருகன் புதுமைக்கும் புதுமை யானவன்.

"பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே"
—திருவாசகம்.

"புதியர்க்கும் புதியன்" —கந்தபுராணம்.
"அபிநவ துங்க கங்கா நதிக்கு மைந்த"—(தமர)திருப்புகழ்

புயகிரி சமுக :—

சமுகம்— கூட்டம். மலைபோன்ற பன்னிரு புயாசலங்களை யுடையவன் முருகன்.

**விகடக :—**

விகட—அக. விகடம்—அழகு. அழகிய திருவுள்ளம் உடைய மூர்த்தி முருகவேள்.

**நிசிசரர் கடக பயிரவ :**

இரவில் உலாவுகின்ற அசுரர்களின் சேனைகட்குப் பயங்கரத்தைச் செய்கின்றவன். கடகம்—சேனை. பயிரவன் பயத்தைச் செய்பவன்.

"கடகம் நெளிந்தது" —(தேரணி) அலங்காரம்.

**கயிரவ மலர்களும் எரி தீயும் கருக வொளி விடுதநுபர :—**

கயிரவம்—செவ்வாம்பல் மலர். மிகவும் சிவந்த மலர், இது இரவில் மலர்வது.

"கயிரவமும் தாமரையும் கமழ் பழனக் குருநாடு"
—வில்லிபாரதம்-(கண்ணன் தூது)

முருகப் பெருமானுடைய திருமேனி மிகவும் சிவந்தது.

"செவ்வானுருவில் திகழ் வேலவன்"
"கையோ அயிலோ கழலோ முழுதும்
செய் யோய்" —அநுபூதி.
"பவளத் தன்னமேனி"—குறுந்தொகை கடவுள் வாழ்த்து.
"செய்யன் ; சிவந்த ஆடையன்" —திருமுருகாற்றுப்படை.
"உருவும் உருவத்தீ யொத்தி" —பரிபாடல்.

முருகனுடைய சிவந்த வடிவைக் கண்டு சிவந்த செவ்வாம்பலும் சிவந்த நெருப்பும் கருகி விடுகின்றனவாம்.

தநு—உடம்பு. பர—மேலானவன்.

**கவுதம புநித முநிதொழ: —**

சிவபெருமானுடைய இடப் பாகத்தைப் பெறவிரும்பிய பார்வதிதேவி, இறைவன் ஆணைப்படி திருவண்ணுமலைக்கு எழுந்தருளியபோது, கௌதம முநிவருடைய ஆச்சிரமத்தில் தங்கினர். இதன் விரிவை அருணுசலபுராணத்தில் காண்க.

**அறம் வளர் கருணையுமை :—**

அம்பிகை முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தவள். கருணை வடிவானவள்.

கருத்துரை

திருமுருகா! மெய்யுணர்வுடன் புணர்கின்ற நன்ஞானயருள் புரிவாய்.

# கற்பு

---

## தவமணி

தவமணி இல்லறத்தில் வாழ்ந்தாலும் அவள் உள்ளம் தவநிலை யில் நிலைத்திருந்தது. எப்போதும் தப்பாது புவனேசுவரியை உபாசனை செய்து கொண்டிருந்தாள். பூஜையறையில் நாற்பத்துமுக்கோண ஸ்ரீசக்கரம் வைத்து சக்திபூஜை செய்து வந்தாள். இரவு முழுவதும் தியானத்தில் தன்னை மறந்து அமர்ந்திருப்பாள்.

''தாயே! பராசக்தி! நான் உன் குழந்தை. நீ உலக மாதா! இப் பிறப்பில் உன்னை நான் அடைந்தேன். அம்மா! என்று உன்னை அழைக்கின்றேன். நான் இன்னும் பிறப்பெடுத்து, இன்னும் ஒருத் தியை அம்மா என்று அழைக்கக் கூடாது. சிலமணி நேரம் வண்டி யில் ஏறிப் பயணம் புரிவதுவே துன்பமாக இருக்கிறது. காற்றில்லா ததும், இருள் சூழ்ந்ததும் மலஜலம் நிறைந்ததும் உதராக்கினியுடன் கூடியதுமான தாய் உதரத்தில் 300 நாள் கிடந்து பயணம் செய்து பிறப்பது எத்துணைக் கடினமானது. எம்பிராட்டியே! என்னை மற்றும் ஒரு கருவில் தள்ளிவிடாதே. பிறவாப் பெருநெறியைத் தந்து என்னை யாண்டருள். நான் அன்பால் உன்பால் வேண்டுவது, பொன்னுமன்று: பொருளுமன்று. பிறவாமை ஒன்றேயாகும். அந்தரி! சுந்தரி! நிரந்தரி! நீலசுந்தரி! நான் கனவிலும் நனவிலும் உன்னை மறவேன்.

''பேயல்லவோ ஒருவேளை வரந்தந்து பேசிடும் கல்
லாயல்லவோ நின்மனங் கெட்டியானதும் அற்புதந்தான்
நீயல்லவோ மதுரேசர் பங்குற்றவள் நீயெனக்குத்
தாயல்லவோ? பிள்ளை நானல்வோ? சிவ சாம்பவியே!''

என்று துதிசெய்து அழுவாள். அம்பிகை திருவடி மீது விழ்ந்து தொழுவாள்.

அவள் கண்களில் நீர் ஆருய்ப் பெருகி அவள் திருமார்பு நனைந்து விடும். இப்படி சதா பக்தி பரவசத்துடன் இருந்தாள் தவமணி.

தவமணியின் கணவனுர் அந்நகரை அறநெறியுடன் அரசு புரியும் ராசசிம்மனது அரண்மனையில் சமையல் வேலை செய்து கொண்டிருந்தார். அவர் நல்ல உழைப்பாளி. பஞ்சாபி ஐயர் சமையல் என்ருல் எல்லோருக்கும் நாவில் நீர் ஊற்றெடுக்கும். அரண்மனையில் விதம் விதமாக உணவுகளை ஆயத்தஞ் செய்வார். தேவாமிர்தம் போல் சுவையாக இருக்கும். சுசிருசியாக இருக்கும்

அரசருக்கு அவரிடம் நிரம்ப அபிமானம் இருந்தது. பம்பரமாகச் சுழன்று பரிமாறுவார். பருத்தி யென்றால் ஆடை கொணருவார். அரண்மனையில் அநேக பெரிய மனிதர்கள் வருவதும் போவதுமாக இருந்தார்கள். அத்தனைபேரும் பஞ்சாபி ஐயரை வாயார வாழ்த்தினார்கள். பஞ்சாபி ஐயர் மனைவிக்கு உணவு ஒரு ஆள் மூலம் வீட்டுக்கு அனுப்பிவிடுவார். இரவும் பகலும் அவருக்கு அரண்மனையில் ஒழியாத அலுவல். இது தவமணிக்கு மிகுந்த அனுகூலமாக இருந்தது. சமைக்கின்ற வேலையும் இல்லை. கணவனுக்குப் பணிவிடைபுரியும் வேலையுமில்லை. கல்யாணமாகியும் அவள் தபோதனியாகவே இருந்தாள். பேருக்குத்தான் இல்லறம். அண்மையில் வாழ்ந்த சாரதாமணிதேவியாரைப் போல் அவள் வாழ்ந்தாள்.

தவமணியின் திருமுகத்தில் தவவொளி சுடர் விட்டுப் பிரகாசிக்கும். அவளைக் கண்டால் யாரும் கைகூப்பி வணங்குவார்கள். அவளிடம் பயபக்தி யேற்படும்.

பெண்ணுருவெடுத்த பெருந் தெய்வம் போல் அவள் காட்சியளித்தாள்.

பஞ்சாபி ஐயர் சில கறிகள் தண்ணீரே யில்லாமல் அசல் பசு நெய்யிலும் தக்காளிச் சாற்றிலும் வேகவைத்து வெகு சுவையாக அமிர்தம் போல் செய்வார். இத்தகைய உயர்ந்த கறிகளை அதிகம் படைக்க முடியாது தானே. சில பிராம்மணர்கள் அரண்மனையில் சாப்பிடுவார்கள். அவர்கள் கொண்டா கொண்டா என்று அண்டா அளவு கேட்பார்கள். பஞ்சாபி ஐயர் சாமானிய காய்கறிகளை நிரம்பப் படைப்பார். சிறந்த உணவுகளை அளவுடன் படைப்பார். இதனால் அந்தப் பிராம்மணர்கட்கு இவர் மீது சீற்றம் உண்டாகியது. இவர் அரசருடைய அபிமானம் உடையவர். இவரை எப்படிக் கெடுப்பது என்று பலப்பல சூழ்ச்சிகளைச் செய்தார்கள்.

ஒரு பிராம்மணன் அரசரிடம் மெல்ல அணுகி "பஞ்சாபி ஐயர் நிதம் நிரம்பவுணவு வகைகளைத் தன் வீட்டுக்கு அனுப்பிவிடுகின்றார்" என்றான்.

அரசர் "அதனால் என்னபிழை: உணவுப் பொருளை அதுவும் வெந்தது. அதனைக் கொண்டு போய் பாங்கியிலா போடப் போகின்றார். நாலு ஏழைகள் சாப்பிடுவார்கள். அவர் நல்ல உழைப்பாளி!" என்று கூறிவிட்டார்.

இன்னொரு பிராமணன் அரசனிடம் அணுகி "அரசரே! பஞ்சாபி ஐயர் மகாமோசம். ஒருவருக்கு ஒருமாதிரி மற்றொருவருக்கு இன்னும் ஒருமாதிரி படைக்கின்றார்" என்றான்.

அரசர், "அதில் என்ன பிழை. நாங்கள் எங்கள் அலுவலகத்தில் எல்லோருக்கும் சமதர்மமாகவா சம்பளம் தருகின்றோம். திறமைக்கு ஏற்பத்தானே ஊதியம் தருகின்றோம். அதுபோல் அவரவர்

தகுதிக்கு ஏற்ப அவர் படைப்பார். இது ஒன்றும் பிழையாகாது. போம்'' என்று கூறிவிட்டார்.

வேறொரு வேதியன் வேந்தரிடம் வந்து ''வேந்தர் பெருமானே! பஞ்சாபி மடைப்பள்ளியில் நெய்யில் நீந்துகின்றார். பாலில் குளிக்கின்றார். இட்டிலி வெற்பேறி சாம்பார்க் குளத்தில் இறங்குகின்றார்'' என்றான்.

வேந்தர் ''ஐயா! உழைக்கின்ற மனிதர் அவர். உழைப்புக்கு ஏற்ற உணவு உண்ணத்தான் செய்வார். எண்ணெய் வார்த்தால் தானே விளக்கு எரியும். இதனை யெல்லாம் நீ பேசக் கூடாது. உன்வேலையைப் பார்த்துக் கொண்டுபோ. இனி இந்தமாதிரி கோள் சொன்னால் உனக்கு அரண்மனையில் அன்னங் கிடையாது. போ'' என்று கூறிக் கடிந்தார்.

இப்படிப் பலரும் செய்த சூழ்ச்சிகள் பலிக்கவில்லை. இறுதியில் ஒரு கொடிய சூழ்ச்சியை ஆராய்ந்து முடிவு செய்தார்கள்.

மாயவார்த்தையில் வல்ல ஒரு பிராம்மணன் ஊருக்கு வெளியே யுள்ள புலைப்பாடிக்குச் சென்றான். அங்கு சிவப்பாக உள்ள ஒரு புலையனைத் தனியே அழைத்து, அவன் கையில் பணத்தைக் கொடுத்து சில வார்த்தைகளை இரகசியமாகக் கூறினான்.

''இதனால் பஞ்சாபி ஐயரின் வேலை தொலைந்தது. அவனுக்கு சீட்டு கிழியும். இதில் தப்ப முடியாது. பயல் தொலைந்தான். அயோக்கியப் பயல். கேட்ட அளவு படைக்காத உலோபி தொலையட்டும்'' என்று நெஞ்சுக்குள் கருவிக் கொண்டான்.

ஒருநாள் அரசன் அரசமா தேவியுடன் அரண்மனை நந்தவனத்தில் அமர்ந்திருந்தார். வழக்கம்போல் அவருக்குச் சிற்றுண்டி கொண்டுபோய்ப் படைத்தார் பஞ்சாபி ஐயர். அந்த சமயத்தில் புலைப்பாடியிலிருந்த ஒரு புலையன் அங்கு வந்து பஞ்சாபி ஐயரைக் கட்டிப் பிடித்து அழுதான்.

''அண்ணா! நீ எங்கேயோ போய் விட்டாய் என்று எண்ணி ஏங்கி நின்றேன். அண்ணா! நீ எப்போது சமையல் வேலை கற்றுக் கொண்டாய். நல்ல இடத்தில் வேலை பார்க்கின்றாய். நாம் சிறு வயதில் எத்தனை அன்பாகப் பழகினோம். நீ அப்போதே மாட்டிறைச்சிகளை நன்றாகப்பக்குவம் செய்வாயே?'' என்று கூறி நீலிக் கண்ணீர் வடித்தான்.

அந்த சமயத்தில் அப்புலையனுடைய மனைவி வந்து மாமா! சுகமா? ஒரு வேளை நீ சேரிக்குவரக் கூடாதா? பூணூல் போட்டு விட்டுப் பாப்பானா போய்விட்டாயே'' என்றாள்.

இதைக்கேட்டு அரசரும் அரசமாதேவியும் பஞ்சாபி ஐயரும் அதிர்ச்சியடைந்தார்கள். பேயறைந்தாற்போல் நின்றார் பஞ்சாபி ஐயர்.

அரசர் இது என்ன அநியாயம். இத்தனை காலமாக நமக்குச் சமையல் செய்தது புலையனு?

இது மன்னிக்கத் தகுந்த குற்றமா? இப்படியும் ஒரு மாயச் செயலா? என்று எண்ணிச் சீற்றம் அடைந்தார். அவருக்கு அதற்கு மேல் அதனை ஆராயவோ விசாரிக்கவோ நாணமாக இருந்தது.

பஞ்சாபி ஐயரைப்பார்த்து "இனி ஒரு கணநேரம்கூட இருக்கக் கூடாது. ஓடிப்போ" என்று கடிந்து கூறினர்.

ஒரு குற்றமும் செய்யாத பஞ்சாபி ஐயர் நேரே தன் வீட்டுக்குச் சென்ருர். தன்மனைவியிடம் நடந்ததைக் கூறி அழுதார்.

தவமணி அம்மையார் "தன் வினை தன்னைச் சுடும். ஓட்டப்பம் வீட்டைச்சுடும் தாங்கள் ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம். வருந்த வேண்டாம். அன்னை பராசக்தியின் கருணை துணை புரியும்" என்று தேறுதல் கூறினுள்.

அன்றிரவு பூஜையறையில் அமர்ந்து தவஞ் செய்தாள். அன்னை யிடம் தன் கணவனுருக்கு நேர்ந்த இடர்தீர்த்து அருள் புரியுமாறு வேண்டினுள்.

"மட்டார் குழல் அங்கயற் கண் அம்மே! இம்மட்டென்று தொகைக்
கெட்டாதெனது துயரம் நின்பால் சொல்லியே சலிக்க
ஒட்டாரம் நீ செய்யலாகாது பார் உன்னடிமை தன்னை
நட்டாற்றில் கைவிட்டிடாதே பழி வெகு நாள் நிற்குமே"

என்று துதி செய்தாள்.

அம்பிகையின் திருக்கரத்தில் இருந்து இளங்கதிர் போல் ஒளி விடும் விலைமதிக்க முடியாத வைர வளையல் அவள் முன் வந்து நின்றது. அதனை யெடுத்து ஆனந்த பரவசம் ஆனுள்.

அடுத்த நாள் காலை அம்பிகையின் வளையலைக் கணவன் கையில் கொடுத்து சில ரகசியங்களைக் கூறினுள்.

பஞ்சாபி ஐயர் அரண்மனைத் தோட்டத்தில் உலாவுகின்ற போது. அரசனைச் சந்தித்து, அந்த வளையலைத் தந்தார். அரசர் அவர்மீது கோபத்துடன் இருந்தார்.

"அரசர் பெருமானே! என்மீது கோபிக்கவேண்டாம். எல்லாம் விதி செய்யும் விளையாட்டு.

இத்தனைகாலம்தங்கள் அன்னத்தையுண்டு வளர்ந்தேன், அதற்கு நான் என்ன கைமாறு செய்யவல்லேன்? எங்கள் முன்னேர்கள் தேடிய பொருள் இது. இது விலை மதிக்க முடியாத ஒன்று. தேவ லோகத்து மணியால் ஆனது. என் அன்புக் காணிக்கையாக இதை அரசமா தேவிக்குக் கொடுக்கின்றேன்" என்று கூறி துணியில் மறைந்து வைத்திருந்த பராசக்தியின் கைவளையலை எடுத்துக் கொடுத்தார்.

அதைக் காணக் கண் கூசியது. அரசர் வியப்பில் ஆழ்ந்தார். ''இது உனக்கு ஏது'' என்று கேட்டார்.

''அரசே! எங்கள் முன்னோர் வைத்திருந்தது'' என்றார் பஞ்சாபி ஐயர்.

அரசர், ''இது ஒற்றை வளையல் மற்றொன்று எங்கே?'' என்றார்.

அரசே! மற்றொன்று நேற்று இங்கே வந்து என் தம்பி யென்றானே! அவனிடம் உளது. நாங்கள் ஆளுக் கொன்றாகப் பங்கிட்டுக் கொண்டோம். அவனை யழைத்து வாங்கிக் கொள்ளுங்கள். சும்மா பெட்டியில் தூங்குவதைப் பார்க்கிலும் இது அம்மா கையில் விளங் கட்டும்'' என்றார்.

உடனே அரசர் ஒரு ஆளை அனுப்பி அவனை அழைத்தார். ''ஏய்! இந்த வளையலைப் போல மற்றொன்று உன்பால் இருக்கின்றதாமே. அதனைக் கொண்டுவா'' என்றார்.

அவன் அதைக்கேட்டு நடுநடுங்கினான். ''அரசர் பெருமானே! இதுமாதிரி என்னிடம் இல்லையே! கண்ணால் கூட நான் பார்த்த தில்லை ?'' என்றான்.

பஞ்சாபி ஐயர், ''தம்பி! பொய் சொல்லாதே. இது நமது அப்பா வைத்திருந்தது. உனக்கு ஒன்று, எனக்கு ஒன்று தந்தார் அல்லவா? இதை நான் மன்னருக்குத் தந்துவிட்டேன். நீயும் கொணர்ந்து கொடுத்துவிடு. இதை நம் வீட்டுப் பெண்கள் அணியத் தகுதி யேது. சும்மா எத்தனை நாள் பெட்டியில் வைத் திருப்பது, ஆதலால் நீ சிறிதும் தயங்காமல் கொண்டுவா. மன்ன ரிடம் கொடுத்துவிடு'' என்றார்.

அவன் ''சுவாமீ! இது போன்ற வைரவளையல் என்னிடம் இல்லை'' என்றான். பஞ்சாபி ஐயர் ''அரசே! இவன் பொய் புகலுகின்றான். நன்றாக உதைத்தால்தான் தருவான்'' என்றார்.

அரசர் ''அடேய்! இந்தப் பயலை நன்றாக உதையுங்கள்'' என்றார் அவ்வளவுதான் அடியாள்கள் அவனைத் தடியெடுத்து நையப்புடைத் தார்கள்.

அவன் அரசர் முன் விழுந்து வணங்கினான். ''அரசர் கோமானே! நான் உண்மையைக் கூறிவிடுகின்றேன். இவர் என் அண்ணன் அன்று; இவருக்கும் எனக்கும் சம்பந்தம் இல்லை. நேற்று அரண்மனை யிலிருந்து குப்பையர் என்ற ஒருவர் வந்து என்னிடம் பணங் கொடுத்து, ''இவரை அண்ணா என்று கூப்பிடு'' என்று கூப்பிடச் சொன்னார். நான் பணத்துக்கு அடிமையாகி அஞ்சாது பொய் கூறி னேன். அதற்குப் பயனாக இன்று எலும்பு ஒடிய உதை பட்டேன். இவர் என் அண்ணன் அல்லர், என்னை உதைக்கவேண்டாம். நான் ஏழை. காப்பாற்றும்'' என்றான்.

# புறத்தண்மையும் அகத்தண்மையும்

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்

மலையைச் சுற்றிலும் அடர்ந்த காடுகள் இருக்கின்றன. மலையின் சாரலிலும் பலவகையான மரங்கள் ஓங்கி வளர்ந்திருக்கின்றன. மாமரங்களும் வேறு வகையான பழமரங்களும் செறிந்து வளர்ந்துள்ளன. பெரிய காடு அங்கே இல்லை. ஆகவே, புலி, சிறுத்தை முதலிய பொல்லாத விலங்கினங்களும் யானையும் உலாவுவதற்கு இடம் இல்லை. காட்டுப் பசுக்கள் அங்கும் இங்கும் ஓடுகின்றன. ஆண்மானும் பெண்மானும்

---

அரசருக்கு உண்மை விளங்கியது பொருமைக்காரர்கள் செய்த சூழ்ச்சி இது என்று உணர்ந்தார்.

பஞ்சாபி ஐயரைப் பார்த்து "ஐயரே! நான் உண்மையுணர்ந்தேன். இந்த வளையல் ஏது?" என்று கேட்டார்.

பஞ்சாபி ஐயர் "அரசே! என் மனைவி சக்தி உபாசனை செய்பவள். இது அன்னை பராசக்தியின் வளையல்" என்ருர்.

அரசர் இதைக் கேட்டு அதிசயம் அடைந்தார். வளையலுடன் நேரே பஞ்சாபி ஐயருடைய வீட்டுக்குச் சென்று தவமணியை வணங்கினுர். வளையலைக் கொடுத்து "அம்மா! இதை அன்னை பராசக்தியிடம் சேர்த்து விடுங்கள்" என்ருர்.

தவமணி அந்த வளையலை ராஜேஸ்வரி திருவுருவத்துக்கு முன் வைத்து கற்பூரங்காட்டினுள். உடனே மாயமாக அது மறைந்து விட்டது. இந்த அதிசயத்தைக் கண்ட அரசர் ஆச்சரியமும் அச்சமும் அடைந்தார்.

தவமணி "அரசரே! இந்த வளையல் நேற்று இரவு எனக்கு தேவியால் அளிக்கப்பட்டது. நீர் அம்பிகையின் அருளால் வாழ்க" என்ருள்.

அரசர் அவரது அடிமலர் மீது விழுந்து வணங்கினுர். பஞ்சாபி ஐயரையும் பணிந்தார். அவர்மீது முன் இருந்த அன்பு ஆயிர மடங்கு அதிகமாயிற்று. அவருடன் அரண்மனை சென்ருர்.

வஞ்சனை செய்த குப்பய்யரை அரண்மனையை விட்டு விரட்டியடித்தார். அதிலிருந்து பொருமைக்காரர்கள் தங்கள் பொருமையைவிட்டு பஞ்சாபி ஐயரிடம் பயபக்தியுடன் ஒழுகினுர்கள்.

பஞ்சாபி ஐயர் தன் மனைவியின் தவசக்தியினுல் தனக்கு வந்த இடர் நீங்கி முன்னிலும் பன்மடங்கு செல்வாக்குடன் வாழ்ந்தார்.

தவமணி அம்பிகையின் அருட்டிறத்தை நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்து சதா தேவி வழிபாட்டில் ஈட்டுபட்டிருந்தாள்.

அலைகின்றன, மரங்களின்மேல் குரங்குகள் ஓடியாடி விளையாடுகின்றன. இவை யாவும் புலால் உண்ணாத விலங்கினங்களாதலால் இவற்றுக்கு வேண்டிய கனிகளும், கொட்டைகளும், புல்லும் அந்தக் காட்டில் நிரம்பக் கிடைக்கின்றன. பொழிலும் காடும் கலந்த சூழ்நிலை அது. அவை பசுமைத் தோற்றத்தோடு இருக்கும் வகையில் போதிய மழை பெய்து கொண்டிருக்கிறது. அங்கே மலையின் அடிவாரத்தில், இறைவனுடைய திருக்கோயில் விளங்குகிறது.

ஏறத்தாழ 1300 ஆண்டுகளுக்கு முன்பு திருவண்ணாமலை தந்த காட்சி இது. திருஞானசம்பந்தர் வாழ்ந்த காலம் அது. இப்போதுள்ள பெரிய கோபுரங்கள் அந்தக் காலத்தில் இல்லை. ஆனாலும் ஓரளவில் திருக்கோயில் சிறப்பாக இருந்தது. பக்தர்கள் வந்து தரிசித்துச் சென்றார்கள். அண்ணாமலையப்பன் உண்ணாமுலை உமையோடு இன்று போலவே அன்றும் எழுந்தருளியிருந்தான். மலைச் சாரலில் அருவிகள் சலசலத்துக் கொண்டிருந்தன திருஞானசம்பந்தருடைய அருமையான தேவாரம் இந்தத் தலத்துக்கு இருக்கிறது. அதனைப் பார்த்தால் அக் காலத்தில் இங்கே இருந்த இயற்கை பெழிலின் சிறப்புத் தெரியும்.

திருஞானசம்பந்தருடைய பாட்டின் வாயிலாக அன்றிருந்த திருவண்ணாமலையின் ஒரு காட்சியை இப்போது பார்க்கலாம்.

மாம்பழத்தில் இரண்டு வகை உண்டு. சுவைத்து உண்ணுவதற்குரிய இனிய கனிகள் சில; புளிக்கும் கனிகள் சில. புளிக்கும் கனிகளைக் கனிய விடாமலே காயாகப்பறித்து ஊறுகாய் போடுவது நம் நாட்டுப் பழக்கம். பழ மாங்காயைத் தேமாங்காயென்றும் ஊறுகாய் மாங்காயைப் புளி மாங்காயென்றும் சொல்வார்கள். இந்த வழக்கம் பலகாலமாக இங்கே இருக்கிறது என்பதை இலக்கண நூலிலிருந்து கூடத் தெரிந்துகொள்ளலாம். செய்யுள் இலக்கணத்தைச் சொல்லும் யாப்பருங்கலக் காரிகை என்ற நூலில் சிலவகையான சீர்களுக்குரிய வாய்பாடாகத் தேமா, புளிமா என்ற இரண்டையும் எடுத்தாளுகிறார் ஆசிரியர் அன்றியும் தேமாங்காய, புளிமாங்காய், தேமாங்கனி, புளிமாங்கனி என்னும் தொடர்களும் சில சீர்களுக்குரிய வாய்பாடுகளாக வருகின்றன.

திருவண்ணாமலைப் பொழில்களில் நல்ல பழ மரங்கள் இருக்கின்றன. அதிலுள்ள தேமாங்கனிகள் காணவும் நுகரவும் இனிமையாக உள்ளன. கொத்துக் கொத்தாய்ப் பழங்கள் தொங்குகின்றன. மரங்களின்மேல் உலாவுகின்ற குரங்குகள் பழங்களைக் கண்டால் சும்மாயிருக்குமா? ஆண் குரங்குகளாகிய கடுவன்களும பெண் குரங்குகளாகிய மந்திகளும் அங்கே விளையாடுகின்றன. இரண்டுமே பழங்களைப் பறித்து உண்ணும் ஆற்றல் உடையவை. குரங்குக் கூட்டத்திலும் ஆண், பெண்

உறவும் அன்பும் இருக்கின்றன. பெண் குரங்காகிய மந்தி தானே பழத்தைப் பறித்து உண்பதைவிட ஆண் குரங்கு பறித்துக் கொடுத்தால் இருமடங்கு உவகையுடன் உண்ணும். மந்திக்குப் பழம் பறித்துக் கொடுப்பதில் கடுவனுக்கும் மிக்க இன்பம் உண்டாகிறது. ஒரு மாமரத்தின் கீழ்க் கிளையில் உட்கார்ந்திருக்கும் ஆண் குரங்கு மேல் கிளையில் குலைகுலையாகத் தொங்கும் தேமாங்கனிகளைக் காணுகிறது. அந்தப் பழத்தின் சுவையை அறிந்த குரங்கு அது. ஆகவே பழத்தைப் பறித்துத் தன்னுடைய மந்திக்குக் கொடுக்கவேண்டு மென்று ஆசைப்படுகிறது. மேலே பாய்ந்து பழமுள்ள கொம்பில் தாவி அதிலுள்ள பழங்களைப் பறித்துக்கொண்டு கீழ்க் கிளைக்கே பாய்கிறது. வேகமாக மேல் கொம்பிலிருந்த பழங்களை இழுத்துப் பறித்துக் கொம்பை விட்டுவிடுகிறது. நாண் அறுந்த வில்லைப் போல அந்தக் கொம்பு வளைந்து மீட்டும் மேலே நிமிர்ந்து செல்கிறது. அதன் வேகத்தைப் பார்த்தால் மேலே ஓடும் மேகத்தில் பட்டுக் கிழிப்பதைப்போல இருக்கிறது. அதே சமயத்தில் மேகத்திலிருந்து சிறிய துளிகள் சிதறுகின்றன. காக்கை ஏறப் பனம்பழம் விழுந்தாற்போலக் குரங்கு விட்ட கொம்பு மேலே போகவும், மேகம் சிறு நுண்துளி சிதறவும் பார்த்தவர்கள் இந்தக் கொம்பு தீண்டியமையால்தான் மேகம் துளிகளைப் பெய்கிறது என்று நினைக்கிறார்கள். மேலே பெரிய மேகங்கள் இருக்கின்றன. அங்கே யிருந்து சிதறும் நுண்துளி கீழேயுள்ள சிறு சிறு பாறைகளின்மேல் படிகின்றன. அந்தப் பாறைகளைத் துறுகல் என்று சொல்வார்கள். குரங்கு மாங்கனியைப் பறித்து விட்ட கொம்பு விசைத்து மேலே போகவும் மேலிருந்து மழைத் துளி பாறைகளின்மேல் சிதறவும் ஒன்றனோடு ஒன்று காரண காரியம்போல அமைந்திருப்பதைப் பார்த்தார் ஞானசம்பந்தர். அந்த அழகிய காட்சியைப் பாடலானார்.

> தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடு தீண்டித்
> தூமாமழை துறுவல்மிசை சிறுநுண்துளி சிதற.

அடுத்தபடி மற்றொரு காட்சி இதன் விளைவாக அங்கே தோன்றுகிறது. சில காட்டுப் பசுக்கள் பாறையின்மேல் படுத்துக் கிடக்கின்றன. அங்கேயுள்ள புல்லை நன்றாக மேய்ந்து அசைபோட்டபடியே அவை படுத்திருக்கின்றன. அவற்றின் மேல் திடீரென்று மழைத்துளி விழவே, மழை வருகிறதென்று எண்ணி அவை அடர்த்தியான பொழிலுக்குள்ளே போய் விடுகின்றன. இப்படிக் குரங்கும் காட்டுப் பசுக்களும் உலாவுகின்ற அந்தப் பூம்பொழிலில் மாம்பழமும் மழைத்துளியும் அழகும் தண்மையும் பொருந்தக் காட்சி தருகின்றன.

> தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடு தீண்டித்
> தூமாமழை துறுவல்மிசை சிறுநுண்துளி சிதற
> ஆமாம்பிணை அணையும்பொழில் அண்ணாமலை.

இத்தகைய இயற்கை யெழில் நிறைந்த சூழலைப் பெற்றது திருவண்ணாமலை. குரங்கினமும் நலம்பெற்று அன்புடன் வாழும் நிலம்; காட்டுப் பசுக்கள் வயிறார மேய்ந்து திரியும் இடம். அங்கே அண்ணாமலை அண்ணல் கோயில் கொண்டிருக்கிறான்.

உலகில் பலவகையான தாபங்களுடன் திரிகின்ற மக்கள் இங்கே வந்து, இங்கேயுள்ள பொழிலின் தண்மையினால் உடல் குளிர, உள்ளங் குளிர தரிசித்துக் கொள்ளும் வகையில் அவன் எழுந்தருளியிருக்கிறான். அந்தப் பெருமானுடைய திருவடியை அன்பர்கள் தரிசித்து இன்புறுகிறார்கள். அந்தத் திருவடி தாமரைப் பூவைப்போல அழகாகவும் மென்மையாகவும் இருக்கின்றது. அதில் வீரக்கழலை இறைவன் புனைந்திருக்கிறான். காலனை உதைத்த பெரு வீரத்தையுடைய திருவடி அல்லவா? அந்த அடியைச் சேவித்துத் தியானிப்பவர்கள் நன்மை பெறுவார்கள்; பாவங்களினின்றும் நீங்கி இன்பம் அடைவார்கள். குளிர்ந்த சூழலில் எழுந்தருளியிருக்கும் அருள் நிரம்பிய பெருமானுடைய குளிர்ந்த திருவடி உள்ளத்தில் புகுந்தால் அங்கேயுள்ள தாபம் எல்லாம் நீங்கித் தண்மையே நிலவும்.

திருவண்ணாமலைக்கு வருகின்ற பக்தர்கள் அது பூம்பொழில்கள் சூழ்ந்த இடத்தில் இருப்பதால் வந்து தங்கி இறைவனைப் பணிந்து இன்புறுகிறார்கள். அங்கே உள்ள விலங்கினங்களும் ஒரு கவலையும் இல்லாமல் வேண்டியவற்றைப் பெற்று வாழ்வதைக் கண்டு மகிழ்கிறார்கள்; அறிவுடையவர்களாதலின் அண்ணாமலை அண்ணலின் திருவுருவத்தைத் தரிசித்து, அவன் கழல் புனைந்த சேவடியை நினைக்கிறார்கள்.

மனிதனுக்குள்ள கவலைகளைப் போக்கிக்கொள்ள வேண்டுமானால் அதற்கு வழி என்ன? ஏதேனும் ஒரு பொருளால் குறை உடையவன், அந்தக் குறையை நிரப்பிக்கொள்ள முடியாமல் மனம் வருந்துகிறான்; என்ன செய்வதென்று கவலைப்படுகிறான்; தன்னினும் மிக்க செல்வனையண்டித் தன் கவலையைப் போக்கும்படி சொல்கிறான், அந்த மனிதனே பார்வைக்கு அதிகச் செல்வம் உடையவனாகத் தோற்றினாலும் அதற்கேற்றபடி அவனுக்கு அதிகக் கவலைகள் இருக்கின்றன. அவரவர்களுடைய நிலைக்கும் ஆசைக்கும் ஏற்றபடி எல்லா மக்களிடத்திலும் கவலைகள் இருந்து கொண்டிருக்கின்றன. கவலையில்லாத மனிதனே உலகில் இல்லை. தனக்கு எதனாலும் குறைவில்லாமல் முழு நிறைவுடன் இருக்கும் ஒருவனை அண்டினால் குறைகளைத் தீர்த்துக் கொள்ளலாம். உலக மக்களில் அப்படி யாரும் இல்லை. இறைவன் ஒருவன்தான் குறைவிலா நிறைவாக இருக்கிறான். ஆகவே, அவனைத் தியானித்து வழிபட்டால் அவன் திருவருளைப் பெறலாம். அதனால் குறைவற்ற நல் வாழ்வும் கவலையில்லா நிலையும் ஏற்படும். இதைத் திருவள்ளுவர் சொல்கிறார்,

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது."

—என்பது திருக்குறள். குறைவிலா நிறைவாக நிற்கும் தகைமையில் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத இறைவனை அடைவார்க்கல்லாமல் மனக்கவலை போவதில்லை என்பது குறளின் கருத்து. ஆகவே, நம்முடைய துன்பங்களைப் போக்கிக் கொள்ள வேண்டுமானால் இறைவனுடைய திருவடிப் பற்றைக் கொள்ளவேண்டும். அதனால் பாவங்கள் நீங்கும், துன்பங்கள் அகலும். அமைதி உண்டாகும்.

திருவண்ணாமலைக்குச் சென்று எம்பெருமானைத் தரிசிக்கப் புகுந்தவர்களுக்கு அங்கேயுள்ள சூழ்நிலையில் முதலில் உடம்பு குளிர்கிறது; பிறகு அவனைத் தரிசித்துத் தியானிப்பதால் உள்ளம் குளிர்கிறது; அதன் பயனாகப் பாவங்களினின்றும் நீங்கி அவர்களுடைய உயிர்களும் குளிர்கின்றன. இவற்றையெல்லாம் எண்ணி ஞானசம்பந்தப் பெருமான் இந்தப் பாசுரத்தைப் பாடுகிறார்.

தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடு தீண்டித்
தூமாமழை துறுவல்மிசை சிறுநுண்துளி சிதற
ஆமாம்பிணை அணையும்பொழில் அண்ணாமலை அண்ணல்
பூமாங்கழல் புனைசேவடி நினைவார்வினை இலரே.

[இனிய மாம்பழத்தை ஒரு கொம்பிலிருந்து ஆண் குரங்கு பறிக்க பறித்துவிட்ட கொம்பினால் தீண்டப்பெற்றுத் தூய, பெரிய மேகம் கீழே யுள்ள பாறைகளின்மேல் சிறிய, நுண்ணிய துளிகளைச் சிதற அதுகண்டு காட்டு மாடில் பெண்ணாகிய பசு வந்து சேர்கின்ற சோலைகளையுடைய திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய தாமரைப் பூப்போன்ற பெருமையை யுடையதும் வீரக்கழல் புனைந்ததுமாகிய செம்மையாகிய திருவடியைத் தியானம் செய்கின்ற அன்பர்கள் பாவம் இல்லாதவராகி இன்புறுவார்கள்.

தேமாங்கனி—இனிய மாம்பழம்; கடுவன்—ஆண் குரங்கு, துறுவல்-சிறு குண்டுப்பாறை; துறுகல் என்பது திரிந்தது. ஆமாம்பிணை-ஆமாவில் பிணை; ஆமா-காட்டுப்பசு; பிணை-பெண் பூமாங்கழல் புனை சேவடி-பூவைப்போன்ற சேவடி, மாசேவடி, கழல் புனை சேவடி என்று தனித்தனியே கூட்டுக. வினை-பாவம்.]

இது முதல் திருமுறையில் பத்தாம் பதிகத்தில் இரண்டாவது பாட்டு.

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

அச்சுக்கூலி ஏற்றத்தாலும், அச்சுத்தாள் விலையேற்றத்தாலும் ஏற்படும் அதிகச் செலவை ஓரளவு இதுகாறும் சமாளித்து வருகின்றோம். இதற்கிடையே மத்திய அரசினர் சிறிய பத்திரிகைகளுக்கு தபாற்கட்டணத்தை ஒன்றுக்கு இரண்டரைப் பங்காக உயர்த்தி விட்டனர். மற்ற தபாற் கட்டணங்களையும் கூட்டிவிட்டனர். ஆக இவ்வாறு இதுபொழுது ஏற்பட்டுள்ள அதிகச்செலவுகளைச் சமாளிக்க ஆண்டுச் சந்தாத் தொகையை மேலும் கூட்டவேண்டிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது. எனவே அன்பர்கள் அடியிற் குறிப்பிட்டுள்ள ஆண்டுச் சந்தாத் தொகைக்கும் தாங்கள் அனுப்பியுள்ள தொகைக்குமுள்ள குறைத்தொகையை விரைவில் அனுப்பிவைக்க வேண்டுகின்றோம்.

**கீலக ஆண்டு முதல் ஆண்டுச் சந்தா**

| | | | |
|---|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ: | 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. | 5-50 |

மானேஜர், திருப்புகழமிர்தம்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.



## அன்பர்கள் கவனத்துக்கு

நமது காரியாலயத்துக்கோ, ஆசிரியருக்கோ எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலை விரும்புவோர் பதிலுக்காக கார்டோ, தபால் தலைகளோ அனுப்பினலொழிய பதிலனுப்ப வசதிப்படாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்

Registered with the Registrar of Newspapers for India under R. N. 1109/57.

Edited by Sri. KIRUPANANDAVARI & Published by M. Madusoodana Sivam, 89, Singanna Chetty Street, Madras-2. Printed by K. M. John at Jeevan Press, 8, Titarappa Mudali St., Triplicane, Madras-5.